# ஞான மாலை

ஆசிரியர்
நடுப்பட்டி நல்லசாமிப் புலவர்

பதிப்பாசிரியர்
செ. இராசு



கொங்கு இலக்கிய வரிசை -2

கூனம்பட்டி
இராசலிங்க மாணிக்கவாசக சுவாமிகள் மீது
நடுப்பட்டி நல்லசாமிப் புலவர் இயற்றிய

# ஞான மாலை

பதிப்பாசிரியர்

புலவர் செ. இராசு, பிஎச்.டி.,
தலைவர், கல்வெட்டியல்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

வெளியீடு

கொங்கு ஆய்வு மையம்,
3 ரமேசு நகர் (புதுஹவுசிங் யூனிட் எதிர்ப்புறம்)
தஞ்சாவூர் - 613 005.

வெளியீடு : **ஆறாம் உலகச் சைவ மாநாடு**
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005.
20.12.1997.

நூல் கிடைக்குமிடம்:

1. கூனம்பட்டி ஆதீனம்
ஸ்ரீமாணிக்கவாசகர் திருமடாலயம்
பல்லகவுண்டம்பாளையம்(அஞ்சல்)
(வழி) விசயமங்கலம் - 638 056.

2. புலவர் செ. இராசு, பிஎச்.டி.,
தலைவர், கல்வெட்டியல்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613 005.

அச்சிட்டோர் : லிப்ரா ஆப்செட் பிரிண்டர்ஸ், தஞ்சாவூர் - 5
☎: 22767.



56-வது குருமகா சந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ ச.இராஜலிங்க மாணிக்கவாசக சுவாமிகள்**

# பதிப்புரை

மாலை என்பது 96 வகைச் சிறுபிரபந்த வகையில் ஒன்று. அம்மாலை வகையுள் ஒன்று ஞானமாலை என்பது. சென்னையில் உள்ள தமிழக அரசு கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் 'ஞானமாலை' என்ற சிற்றிலக்கியம் ஒன்றுள்ளது. அதனில் இந்நூல் வேறுபட்டது.

இந்த ஞானமாலை என்னும் நூல் ஈரோடு மாவட்டம் கூனம்பட்டி திருமடத்தில் 52 ஆம் குருமகாசந்நிதானமாக விளங்கிய தவத்திரு இராசலிங்க மாணிக்கவாசக சுவாமிகள் மீது பாடப்பட்டது. நடுப்பட்டி நல்லசாமிப் புலவரால் இயற்றப்பட்டது.

வரலாற்றுச் சிறப்பும், சமயச் சிறப்பும் மிக்க கூனம்பட்டி திருமடத்தில் இந்த ஏட்டுச் சுவடி உள்ளது. 7 ஏடுகள் மட்டுமே உள்ளது. 24 ஆம் பாடலில் இறுதி அடி குறைகிறது. பெயருக்கு ஏற்ப பல சைவ சித்தாந்தக் கருத்துக்கள் விரவிக் காணப்படுகின்றன. இந்நூல் முப்பது பாடல்கள் கொண்டதாக இருக்கக்கூடும்.

தஞ்சை, தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் 1997 ஆம் ஆண்டு டிசம்பர் 19-21 ஆம் நாட்களில் நடைபெறும் உலகச் சைவ மாநாட்டில் இந்நூல் வெளியிடப்பெறுகிறது.

திருமடத்து உதவியுடன், கோவை திரு இரா. கனகரத்தினம் அவர்கள் உள்ளிட்ட கூனம்பட்டி திருமடத்து அன்பர்கள் உதவியாலும் இந்நூல் வெளியிடப்படுகிறது.

உலகச் சைவ மாநாட்டுப் பேராளர்கட்குக் கூனம்பட்டி மாணிக்கவாசகர் திருமடத்தின் வரலாற்றுடன் கூடிய இந்நூல் அன்பளிப்பாக அளிக்கப்படுகிறது. இந்த ஓலைச் சுவடியை அளித்ததுடன் நூலாக்கத்திற்கு வேண்டிய அரிய அறிவுரைகளை வழங்கி நூல் வெளியிட அனுமதி வழங்கிய கூனம்பட்டி திருமடாலய 56 ஆம் குருமகா சந்நிதானம் தவத்திரு. இராசலிங்க மாணிக்கவாசக சுவாமிகள் அவர்கள் அருட் கருணைக்குக் கொங்கு ஆய்வு மையம் தன் நன்றியைக் காணிக்கையாக்குகிறது.

சுவாமிகளின் தம்பிமார்கள் திருவாளர்கள் ச. சுந்தரமூர்த்தி சிவம், ச. திருஞானசம்பந்தசிவம், ச. தத்தாத்ரேயசிவம், ச. நடராசசிவம், இளவரசு திரு இரா. சரவண மாணிக்கவாசகம், செஞ்சேரி திரு கார்த்திகேயக் குருக்கள் ஆகியோருக்கு நன்றி உரியதாகுக.

சுவாமிகள் ஆசார்ய பட்டாபிடேக முடிசூட்டு விழாவன்று 09.09.1994 அன்று திருமடத்தின் விரிவான வரலாறு கொங்கு ஆய்வு மையத்தால் தொகுக்கப்பட்டு சக்தி நிறுவனங்களின் தலைவர் அருட்செல்வர் முனைவர் திருமிகு. நா. மகாலிங்கம் அவர்களால் வெளியிடப்பட்டது. அருட்செல்வர் அவர்கள் கூனம்பட்டி ஆதீன ஸ்ரீ மாணிக்கவாசகர் அறக்கட்டளையின் தலைவராக விளங்குகிறார்கள்.

இந்நூலின் அரிய சொற்களுக்கு விளக்கம் அளித்த தஞ்சை வழக்கறிஞர் சேக்கிழார் அடிப்பொடி திரு தி.நா. இராமச்சந்திரன் அவர்கட்கும், தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறைத் தலைவர் முனைவர் த.கோ. பரமசிவம், முனைவர் வே.இரா. மாதவன், திரு மோ.கோ. கோவைமணி ஆகியோருக்கு நன்றி உரியதாகுக.

'புயல்காத்துப் பாட்டும், பஞ்சக் கும்மியும்' என்ற சுவடி நூல் கொங்கு ஆய்வு மையச் சார்பில் முதல் நூலாக வெளிவந்தது. இது இரண்டாவது வெளியீடு.

கூனம்பட்டி திருமடாலய அடியார்கள் அனைவருக்கும் நன்றி.

*இங்ஙனம்*

கூனம்பட்டி திருமடாலய சீடன்
**புலவர் செ. இராசு**
அமைப்பாளர், கொங்கு ஆய்வுமையம்.

## கூனம்பட்டி

# மாணிக்கவாசகர் திருமடம்

### கொங்குநாடு

பழந்தமிழ்நாடு சேர, சோழ, பாண்டிய நாடுகளுடன் கொங்குநாடு தொண்டைநாடும் சேர்ந்து ஐந்து நாடுகளாக விளங்கியது தண்டியலங்காரப் பழைய மேற்கோள் பாடல் 'வியன் தமிழ்நாடு ஐந்து' என்றும், திருமந்திரம் 'தமிழ் மண்டிலம் ஐந்து' என்றும், நாமக்கல் மாவட்ட எருமைப்பட்டிக் கல்வெட்டு 'ஐவர் இராசாக்கள்' என்றும் கூறுகின்றன.[1] நற்றிணை, குறுந்தொகை, பதிற்றுப்பத்து, அகநானூறு புறநானூறு போன்ற சங்க இலக்கியங்களில் கொங்கு, கொங்குநாடு கொங்கர் பற்றிய குறிப்புக்கள் வருகின்றன.[2] சங்க இலக்கியத்தில் கொங்குக் குறுநில மன்னர்கள் பலர் குறிக்கப்பட்டுள்ளனர்.[3]

சிலப்பதிகாரத்திலும், திருமுறைகளிலும், திவ்வியப் பிரபந்தத்திலும், கி.பி. 4-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பூலாங்குறிச்சிக் கல்வெட்டு முதல் காலந்தோறும் பொறிக்கப்பட்ட பல கல்வெட்டுக்களிலும் முற்காலப் பாண்டியர் செப்பேடுகளிலும் கொங்குநாடு குறிக்கப்பட்டுள்ளது.[4]

### குறுப்புநாடு-விசயமங்கலம்

கொங்குநாடு முன்பு 24 நாடுகளாகப் பிரிக்கப்பட்டது. அவற்றுள் குறுப்புநாடு ஒன்று. 'கொங்கில் குறும்பில் குரக்குத் தளியாய்' என்பது சுந்தரர் தேவாரம்.[5] எனவே கி.பி. 9-ஆம் நூற்றாண்டுக்கு முன்னரே குறுப்புநாட்டுப் பிரிவு ஏற்பட்டுள்ளது. கொங்குச் சோழர் நாளில் குறுப்புநாடு 'வீரசோழபுரநாடு' எனவும் அழைக்கப்பட்டது.[6]

குறுப்பு நாட்டில் தொன்மையானதாக 32 ஊர்கள் உள்ளன அவற்றுள் ஒன்று விசயமங்கலம். சங்க காலத்தில் 'வாகை' என்று அழைக்கப்பட்ட இவ்வூர் சமணர்கள் தொடர்பால் 'விசயமங்கலம்' என்று பெயர் பெற்றது. கூனம்பட்டி ஆதீனம் விசயமங்கலத்தில் நிறுவப்பட்டது

### மாணிக்கவாசகர் திருமடாலயம்

சோழ வளநாட்டில் திருச்சி மாவட்டத்தில் குழித்தலை வட்டத்தில் குழித்தலையிலிருந்து மணப்பாறை செல்லும் வழியில் இனாம் சத்தியமங்கலம் சார்ந்த சிவாயம் என்னும் ஊரில் வாட்போக்கி மலை உள்ளது. அதற்குச் சிவாயமலை, இரத்தினகிரி என்னும் பெயர்கள் உண்டு.

வாட்போக்கியில் இரத்தினகிரிப் பெருமானை முப்போதும் தீண்டி வழிபடும் ஆதிசைவக் குடும்பத்தில் தோன்றிய மாணிக்கப் பண்டிதர் தலயாத்திரையாக மதுரை சென்றபோது மாணிக்கவாசகரைச் சந்தித்து அவர் சீடரானார். நீங்கா நிழல்போல் மாணிக்கவாசகருடன் இருந்த மாணிக்கப் பண்டிதருக்குச் சிதம்பரத்தில் ஞான தீட்சையும், சிவானந்த வெள்ளத்தினாலே ஞானாபிடேகமும் செய்தருளி 'மாணிக்கவாசகர்' என்ற தம் திருநாமத்தைச் சூட்டித் தாம் வழிபட்டு வரும் மீனாட்சி சுந்தரேசுவரரையும் அளித்தார்.

கொங்கு நாடு சென்று திருமடம் அமைத்துச் சைவப் பணிபுரியுமாறு தம் சீடருக்கு மாணிக்கவாசகர் ஆணையிட்டார். வாட்போக்கி, அவிநாசி, விசயமங்கலம் போன்ற ஊர்களில் மாணிக்கவாசகர் பெயரால் திருமடங்கள் நிறுவப்பட்டன.[7]

விசயமங்கலம் மடத்துத் தலைவர் தனிமையிலிருந்து சிவயோக நிஷ்டையில் ஈடுபட அவ்வூருக்கு மேற்கே சீடர்களோடு எழுந்தருளிய இடம் இன்று சாமியார் பாளையம் என்று வழங்கப்படுகிறது.

விசயமங்கலம் மன்னனின் மகன் கூனை நிமிர்த்த காரணத்தால் அரசன் அளித்த கொடை நிலத்தில் திருமடம் அமைத்த பகுதிக்குக் 'கூனம்பட்டி' என்று பெயர் ஏற்பட்டது. கூன் நிமிர்ந்த அரசகுமாரனுக்குச் சுவாமிகள் திருமணமும் செய்து வைத்தார். அதனால் கூனம்பட்டிக்குக் 'கல்யாணபுரி' என்னும் பெயரும் ஏற்பட்டது.

### அருளாளர்கள் அற்புதச் செயல்கள்

கொங்கு நாட்டில் சைவசமயப் பணிபுரிந்த கூனம்பட்டி ஆதீனத் தலைவர்கள் சிவனருளால் பல அற்புதங்களைச் செய்துள்ளனர்.

1. இறந்தவரை எழுப்பியது[8]
2. பூதங்களை அடிமை கொண்டது[9]
3. பூதங்களைப் பல்லக்குச் சுமக்க வைத்தது[10]
4. எட்டிக்காயை இனிதாக்கி அடியாரை உண்ணச் செய்தது[11]
5. யானை இழுத்தும் பெயராவண்ணம் கலசம் அமைத்தது[12]
6. பட்டமரம் தழைய வைத்தது[13]
7. ஊமையைப் பேச வைத்தது[14]
8. வேங்கைப் புலி வணங்கி ஏகியது[15]

போன்ற அற்புதங்களை இம்மடத்து அருளாளர்கள் செய்துள்ளனர்.

### கல்வி நிறுவனம்

கூனம்பட்டி ஆதீனத் தலைவர்கள் பலர் தமிழிலும், வடமொழியிலும் வல்லவர்களாக விளங்கினர். பலர் புலமையாளர்களாக

விளங்கிப் பல நூல்களும் இயற்றியுள்ளனர். எண்சுவடி, கணிதம், பூசைவிதிகள், நீதிநூல்கள், இலக்கண நூல்கள் ஓலைச்சுவடி வடிவில் இம் மடத்தில் இன்றும் உள்ளன.[16] எனவே முன்பு இங்கு கல்வி, சமயப் பயிற்சி நிறுவனம் இருந்திருக்க வேண்டும். இடையில் நின்றுவிட்ட இந்நிறுவனங்கள் கூனம்பட்டித் திருமடத்தில் இன்று மீண்டும் நிறுவப்பட்டு இயங்கி வருவது சிறப்புக்குரியதாகும்.

## இலக்கியங்கள்

புலவர்கள் பலர் என்றும் நிறைந்திருந்த கூனம்பட்டி ஆதீனம் தமிழ்ச் சங்கம் போலவே விளங்கியுள்ளது.

1. மாணிக்கவாசகர் நிலைமண்டில ஆசிரியப்பா[17]
2. மாணிக்கவாசகர் மேகவிடு தூது[18]
3. மாணிக்கவாசகமூர்த்தி ஆற்றுப்படை[19]
4. இராசலிங்க மாணிக்கசுவாமி சதகம்[20]
5. மாணிக்கப் பண்டிதர் பிள்ளைத்தமிழ்[21]
6. மாணிக்கவாசகர் பழமொழிமாலை[22]
7. மாணிக்கவாசகர் ஞானமாலை[23]

என்பவை கூனம்பட்டித் திருமடம் பற்றிய இலக்கியங்களாகும். விருந்தோம்பலில் இம்மடம் சிறப்புற்று விளங்குவதை ஒரு புலவர்

*'துவயல் வருவல் துவட்டல் கறியும்*
*அவியல் குழம்புரசம் அப்பம்-அவல்வடகம்*
*பேணிவடை பாயசநெய் பேணி அமுதளிக்கும்*
*மாணிக்க வாசர் மடம்'*

என்று பாடியுள்ளார்.[24]

இவை அன்றி இப்பகுதியில் இயற்றப்பெறும் பிற இலக்கியங்களிலும் கூனம்பட்டி ஆதீன அருளாளர்கள் போற்றிப் புகழப்பட்டுள்ளனர்.

1. விசயமங்கலம் விசயநாயகியம்மன் ஊஞ்சல்பாட்டு[25]
2. கதித்தமலை முருகன் தங்கச் சிந்து[26]
3. கதித்தமலை முருகன் பதிகம்[27]
4. புதுநகர் நல்லணவேள் காதல்[28]

ஆகிய இலக்கியங்கள் கூனம்பட்டி ஆதீனத் தலைவர்கள் புகழ் பாடுகின்றன. கூனம்பட்டி ஆதீனம் பற்றிய பல தனிப் பாடல்களும் உள்ளன.

### கல்வெட்டுக்கள்

விசயநகர மன்னரின் ஆளுநர் வீரமகாராய திம்மராயர் காலத்தில் ஐம்பத்தாறு தேசத்துப்பலர் என்ற வணிகக் குழுவினர் விசயமங்கலத்து மாணிக்கப் பண்டிதருக்குச் சுமை ஒன்றுக்குக் கால் பணம் மகமையாக அளித்தனர் என்று கோவை மாவட்ட ஒத்தக்கால் மண்டபம் கல்வெட்டுக் கூறுகிறது.[29]

விசயமங்கலம், தளவாய்பட்டினம் போன்ற ஊர்க் கல்வெட்டுக்களில் காணப்படும் கொடைகள்

*'குருவாகிய கூனம்பட்டி மாணிக்கவாசகர் மடம் மாணிக்கவாசக*

*சுவாமியார் அவர்களுட நாளையில்'*

அளிக்கப்பட்டதாகப் பொறிக்கப்பட்டுள்ளன. இது மிகவும் அரிய தொடராகும்.[30]

### செப்பேடுகள்

கூனம்பட்டி ஆதீனத்தில் இரண்டு செப்பேடுகள் உள்ளன. கோயமுத்தூர் கிருஷ்ணராசப்பேட்டையில் கூடிய ஐம்பத்தாறு தேசத்து எட்டுவகைப் பலரும் பட்டக்காரரும் ஆகிய வணிகக் குழுவினரில் பாலைக்காட்டுச் சேரிப்பேட்டை, கொடுவாய், கொல்லங்கோடு, துப்பநாடு, மண்ணார்க்காடு, மேனாடு ஆகிய இடங்களில் வாணிபம் செய்வோர் தம் ஏற்றுமதி, இறக்குமதிப் பொருளுக்குப் பொதிக்கு வீர்ராயன் காசு அரைக்காசு வீதம் மகமை அளிப்பதாக ஒப்புக் கொண்டு எழுதிக் கொடுத்தது முதல் செப்பேடு.

விசயமங்கலத்தைச் சேர்ந்த படைத்தலைக் கவுண்டர்கள் ஐந்து பங்காளிகள் 16 வள்ள பூமியை மடத்துக்குக் கொடையாக அளித்த விபரத்தை இரண்டாம் செப்பேடு கூறுகிறது.[31]

### வரலாற்று ஆவணங்கள்

கூனம்பட்டி திருமடத்தில் செப்பேடுகட்கும் கல்வெட்டுக்கட்கும் நிகரான பல ஓலைப் பட்டயங்கள் உள்ளன. செங்குந்தர் வெற்றியைச் கூறும் வடமலாயி பட்டயம், சென்னிமலைக் குருக்கள் மாணிக்கவாசகர் திருமடத் தலைவருக்கு எழுதிக் கொடுத்த கையோலை, கேரள மாநில சித்தூர் மடத்தினர் எழுதிக் கொடுத்த கையோலை, ஐநூற்றாஞ் செட்டியார் மகமைப் பட்டயம், கூனம்பட்டி, ஞானசிவாச்சாரியார் மடங்களின் பட்டயம் ஆகியன அவற்றுள் சில.[32]

1807 ஆம் ஆண்டு ஜூன் 14-ஆம் நாள் இத்திருமடத்து மாணிக்கவாசகத் தம்பிரான் சென்னிமலையில் முகாமிட்டிருந்த போது மக்கென்சிதுரைக்கு எழுதிக் கொடுத்த ஆவணம் தமிழக அரசு கீழ்த்திசை ஓலைச்சுவடி நூலகத்தில் உள்ளது.[33]

## திருமடத்துத் தலைவர்கள்

திருமடத்தின் 50, 51, 52, 53, 54 -ஆம் குருமகாசந்நிதானமாக எழுந்தருளியிருந்தவர்கள் தவத்திரு சரவண மாணிக்கவாசக சுவாமிகள், தவத்திரு இராசலிங்க மாணிக்கவாசக சுவாமிகள், தவத்திரு இராசலிங்க மாணிக்கவாசக சுவாமிகள், தவத்திரு நல்ல சுப்பிரமணிய மாணிக்கவாசக சுவாமிகள், தவத்திரு நாகரத்தின மாணிக்கவாசக சுவாமிகள் ஆகியோர் ஆவர்.

55-ஆம் குருமகாசந்நிதானமாக 08.11.1973 முதல் திகழ்ந்தவர்கள் 'சைவப் பிரசங்கமணி' "கோவைச் சேக்கிழார்" தவத்திரு சரவண மாணிக்கவாசக சுவாமிகள் ஆவார்கள்.

52-ஆம் குருமகாசந்நிதானம் தவத்திரு இராசலிங்க மாணிக்கவாசக சுவாமிகள் அருளாட்சிக் காலத்தில் மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர் மகாவித்துவான் நல்லதம்பிப் பிள்ளை அவர்கள் கூனம்பட்டி ஆதீன வித்துவானாக விளங்கினார்கள்.

அவர்கள் காலத்தில் சைவ சித்தாந்த மதோத்தாரணர் மாயாவாத தும்ச கோளரி யாழ்ப்பாணம் சதாவதானம் கதிரைவேற் பிள்ளை, சைவ சித்தாந்த சண்ட மாருதம் சென்னை (சூளை) சோமசுந்தர நாயகர், நாயகரின் ஆசான் காட்டாவூர் சுந்தரேச சிவாச்சாரியார், பச்சாம்பேட்டை சிவாகம பரிபாலகர் குருமணி சத்தியோஜாத சிவாச்சாரியார், காசிவாசி செந்திநாதையர், கோவை (சாமக்குளம்) வெங்கட்டரமண தாசர், தமிழ்நெறி விளக்கப் பரம்பரை பவானித் தமிழ்ப் பண்டிதர் க. குமாரசாமிப்பிள்ளை முதலிய சைவப் பேறிஞர்கள் திருமடத்தோடு மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தனர்.[34]

54-ஆம் குருமகாசந்நிதானம் தவத்திரு நாகரத்தின மாணிக்கவாசக சுவாமிகளிடம் சிவதீட்சை பெற்றவருள் ஒருவர் காசிவாசி சைவ சித்தாந்த சரபம், சிவாகமபானு, மகாமகோபாத்யாய ஈசான சிவாச்சாரியார் (சென்னிமலை) ஒருவர்.

ஆதீனத் தலைவர்கள் பல்லாயிரம் பேருக்குச் சிவதீட்சை செய்வித்துள்ளனர்.

இப்பொழுது 56-ஆவது குருமகாசந்நிதானமாக 09.09.1994 முதல் எழுந்தருளியிருப்பவர்கள் கொங்கு மண்டல குலகுரு, இறையருட் செம்மல், ஆதிசைவ அருட் தோன்றல் தவத்திரு ச. இராசலிங்க மாணிக்கவாசக சுவாமிகள் அவர்களாவார்கள்.

## சமய, சமூகப்பணி

ஞாயிறு, வியாழக் கிழமைகளில் அடியார்கள் பலர் திருமடத்திற்கு வந்து ஆதீன கர்த்தர்களின் பஞ்சாட்சர மந்திரத்தால் விபூதி பெற்று அருள் ஆசி பெற்று நோய் நீக்கம் பெறுகின்றனர். மருத்துவர்கள் கைவிட்ட பல நோயாளிகள் நலம் பெற்றுள்ளனர். தங்கள் குடும்பத்

தொல்லைகளும், சிக்கல்களும், தீராத இடுக்கண்களும் நீங்கும் பொருட்டு தாய்ப் பசுவை நோக்கி ஓடிவரும் கன்றுபோல் வந்து அறிவுரையும், ஆசியும் பெற்றுப் பலர் துயர் நீங்கி இன்புற்றிருக்கின்றனர்.

ஊத்துக்குழி கதித்தமலை, அருள்மலை, திட்டமலை, பொன்மலை, சீனாபுரம் விசையகிரி, பாலக்காடு-கொடும்பு, அலகுமலை, குன்னத்தூர், கெட்டிசெவியூர், பாரியூர், கொளப்பலூர், திங்களூர், விசயமங்கலம், ஆனங்கூர், கவுந்தப்பாடி ஆகிய இடங்களில் உள்ள பல கோயில்களில் நடைபெறும் பிரம்மோத்சவம், தேர்த் திருவிழா ஆகியவற்றிற்குப் பிரதான மடாதிபதியாகவும், குரு ஸ்தானாதிபதியாகவும் விளங்கி ரட்சாபந்தனம் (காப்புக்கட்டு) செய்து வைக்கும் உரிமையுடையவர்களாகவும் கூனம்பட்டி ஆதீனகர்த்தர்கள் விளங்குகின்றனர்.[35]

*வாழிதிரு வாதவூர்த் தேசிகனார் வண்மரபு*
*வாழிகலி யாணபுரி வந்தோங்கும் - ஊழிமலி*
*மாணிக்க வாசகராம் வண்குருவும் வாழியவர்ப்*
*பேணுமடி யாரும் பெரிது.*

### குறிப்புகள்

1. தண்டியலங்காரம்-நூற்பா 75 ; திருமந்திரம் எண் 1646 ; சேலம் மாவட்டக் கல்வெட்டுக்கள்.
2. கொற்றச்சோழர் கொங்கர்ப்பணீஇயர்-வெண்கோட்டு யானை போஓர் கிழவன் (நற்றிணை 10); ஒளிறுவாள் கொங்கர் (குறுந்தொகை 383); ஆகெழு கொங்கர் (பதிற்றுப்பத்து 22); வாடாப் பூவின் கொங்கர் ஓட்டி (அகநானூறு 253); கொங்கு புறம் பெற்ற கொற்ற வேந்தே (புறநானூறு 373).
3. அத்தி, அதியமான், ஆய், ஈந்தூர் கிழான் தோயன்மாறன், ஏற்றை, ஓரி, கங்கன், கட்டி, கடியநெடு வேட்டுவன், குமணன், கொடுமுடி, கொண்கானங்கிழான், தாமான் தோன்றிக்கோன், நன்னன், பழையன், புன்றுறை, பேகன், லிச்சிகோ.
4. ஆவணம் 1 ப.68 (அக்டோபர் 1991)
5. சுந்தரர்-ஊர்த்தொகைப்பாடல்
6. கத்தாங்கண்ணிக் கல்வெட்டு (வீரசோழ வள நாட்டு வீரசோழபுர நாட்டு பிரமதேயம் கற்றான்ங்காணியான வீரசோழச் சதுர்வேத மங்கலம்).
7. ஸ்ரீ மாணிக்கவாசகர் திருமடாலய வரலாறு, பக். 22-24.

8. 'இப்புவிச் சீவன் இழந்தவனை யேயெழுப்பி
ஒப்பித்த சாதுரிய உத்தமன்' (மாணிக்கவாசகர் மேகவிடுதூது 257)

'இறந்த பிரேதத்தை எழுப்பியுய்யச் செய்த
சிறந்தமந்திர வாதமுள்ள தேனே' (மாணிக்கவாசக மூர்த்தி ஆற்றுப்படை 156)

'மருவந்தி யேட்டில் பிரேதம்உயிர் பெறஆண்ட
மந்திரமா ணிக்கசாமி' (தனிப்பாடல், கூனம்பட்டி திருமடாலய வரலாறு, ப.35)

9. 'வையா புரிக்கீர னூர்ப்பூதம் அதைவெல்ல
வந்தமா ணிக்கசாமி' (தனிப்பாடல், மாணிக்கவாசகர் திருமடாலய வரலாறு, ப.38)

'வன்கூளி யாளிபேய் நெல்குத்த நீர்தந்த
வலியமா ணிக்கசாமி' (தனிப்பாடல், வரலாறு, ப.42)

10. 'பூதம்முன்னங் கொம்புகொள்ளப் பொறபின் கொம்புதன்னை
ஏதமுறு மனிதர் ஏந்திவர' (மாணிக்கவாசக மூர்த்தி ஆற்றுப்படை 157)

'மணிசிவிகை ஒருகொம்பை மாபூதம் ஏந்திவர
மந்திரமா ணிக்கசாமி' (தனிப்பாடல், மாணிக்கவாசகர் திருமடாலய வரலாறு, ப.38)

'தண்டிகை ஒருபுறம் தாங்கியே வருகத்
தண்டிகை ஒருபுறம் தான்சும்மா நடக்க' (திங்களூர் நொண்டி, ப. 80)

11. 'பண்டெட்டிக் காய்ப்பழத்தைப் பட்சித்துத் தொண்டரெலாம்
தாகம் பசிதீர்த்து சந்தோச மாய்வணங்கி
ஏகவும் மாயை இயற்றினான்' (மாணிக்கவாசகர் மேகவிடு தூது 255-56)

12. 'கதிவளர் கொடும்பினில் கலசமே தாபித்த
கடவுள்மா ணிக்கசாமி' (தனிப்பாடல், கூனம்பட்டி திருமடாலய வரலாறு, ப. 34)

13. 'மாமரம் பட்டது தழைக்க
மந்திரம்சொல் மாணிக்கசாமி' (தனிப்பாடல், கூனம்பட்டி திருமடாலய வரலாறு, ப. 4)

14. 'பெற்றிடும் ஊமைப் பிள்ளையைப் பேசி
வைத்தமாணிக்க வாழ்மலைக் குரு' (திங்களூர் நொண்டி, ப. 80)

15. ஞானமாலை பாடல் 21 பார்க்கவும்.

16. கொங்குநாட்டு முதுபெரும் புலவர் வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் அவர்கட்குத் குவலயானந்தம் போன்ற இலக்கண ஏடுகள் கூனம்பட்டி மடத்தில் கிடைத்தன.

17. பெரும்புலவர் வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் பதிப்பித்துள்ளார்.

18. காரிகூடல் கார்காத்த வேளாளர் காலிங்கராயர் குலக் கோபால் இயற்றியது. 368 கண்ணிகள் உடையது. 6.5.1815 இல் எழுதி முடிக்கப்பட்டது. பேரூர் சாந்தலிங்கர் திருமடத் தில் ஏட்டுச்சுவடி உள்ளது. 1984 இல் பாரதியார் பல்கலைக் கழகத்தில் பேரூர் மாணவி செல்வி பெ. தேவகி இச்சுவடியை ஆய்ந்து எம்ஃபில் பட்டம் பெற்றுள்ளார்.

19. கூனம்பட்டி ஆதீன 52-ஆம் குருமகாசந்நிதானம் தவத்திரு இராசலிங்க மாணிக்கவாசக சுவாமிகள் 50 ஆம் குருமகா சந்நிதானம் தவத்திரு சரவண மாணிக்கவாசக சுவாமிகள் மீது பாடியது. 185 கண்ணிகளை உடையது. பேரூர் சாந்த லிங்கர் திருமடத்தில் உள்ள இச்சுவடியை ஆய்ந்து பேரூர்க் கல்லூரி மாணவி செல்வி பா. மல்லிகேசுவரி எம்ஃபில் பட்டம் பெற்றுள்ளார். இவ்விரு ஏடுகளும் பெரும்புலவர் வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் அளித்தவை. இவை இரண்டும் அச்சேறவில்லை.

20. ஈரோடு அரசினர் அருங்காட்சியகத்தில் இக் குறை ஏட்டுச் சுவடி உள்ளது. 21 ஏடுகள் கொண்டது. இன்னும் அச்சேறவில்லை.

21. ஈரோடு அரசினர் அருங்காட்சியகத்தில் இந்த ஏடு உள்ளது. 36 ஏடுகள் உடைய குறை நூல். இன்னும் அச்சேறவில்லை.

22. குன்னத்தூர் வாசதேவ கவிராயர் பாடியது. சென்னை வியவகார தரங்கினி அச்சுக்கூடத்தில் 1875 ஆம் ஆண்டு அச்சிடப்பட்டது.

23. இச்சுவடி கூனம்பட்டி மாணிக்கவாசகர் திருமடத்தில் உள்ளது. 7 ஏடுகள் உடைய குறை நூல்.

24. சிவன்மலைக் குறவஞ்சி முன்னுரையில் தி.அ. முத்துசாமிக் கோனார் காட்டியுள்ள பாடல்.

25. ஊத்துக்குழி கதித்தாசலன் சாமிநாதப் புலவர் பாடியது:

*'சீர்கொண்ட தென்குருப்ப நாட்டில் வாழும்*
*திறராச லிங்ககுரு'* (1)

*'கருணைவளர் மாணிக்கசாமி வாழி* (10)

26. கம்புளியம்பட்டி வெள்ளோடு சாத்தந்தைகுல (விசயமங்கலம் விசயாபுரியம்மன் கோயில் ஐந்து பங்காளிகளில் நாலாமவர்) நாகப்ப கவுண்டர் பாடியது. கூனம்பட்டி வில்லேஜ் மேஜிஸ்ட் ரேட் வெள்ளோடு சாத்தந்தை குல குழந்தைகவுண்டர்விருப்பப் படி 1875 இல் சென்னை கலாநிதி அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது.

*'வேணு வரம்கொடுக்கும் வேலன்மேல் சிந்துரைக்க*
*மாணிக்கவாசகர்தம்-தங்கம்-மகிமைப் பதம் துணையே'*

27. மேலே 26-ஆம் குறிப்பில் உள்ளபடி.

*'மண்டலம் துதிக்கும் குருராச லிங்க*
*மாணிக்க வாசகர் நேச'*

28. வெள்ளோட்டை அடுத்த புதுவலசு நல்லணகவுண்டர் மீது பாடப்பட்டது. ஈரோடு அரசு அருங்காட்சியகத்தில் ஏட்டுச் சுவடி உள்ளது. இன்னும் அச்சேறவில்லை.

*'மண்டலத்தி லேவிசய மங்கைநகர் மாணிக்கப்*
*பண்டிதராம் எங்கள்குரு பாதம் மறவோமே'*

29. இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை ஆண்டு 1964 எண் 216.

30. கூனம்பட்டி திருமடாலய வரலாறு, பக், 66, 68-69

31. மேல் குறிப்பிட்ட நூல், பக். 70-77

32. தினமலர் (ஈரோடு) 20.7.97

33. தமிழக அரசு கீழ்த்திசைச் சுவடி நூலகம் எண் டி.2966 ; ஆர். 8257; கூனம்பட்டி திருமடாலய வரலாறு, பக். 78-80.

34. கூனம்பட்டி திருமடாலய வரலாறு, பக். 26-29.

35. மேல் குறிப்பிட்ட நூல், பக். 24-25.



### கூனம்பட்டி

### இராசலிங்க மாணிக்கவாசக சுவாமிகள் மீது

### நல்லசாமிப் புலவர்

### இயற்றிய

# ஞான மாலை

## காப்பு

நீர்கொண்ட வேணிமதி மழுமான் கையும்
நீலகண்ட மும்கரந்து நேமி தன்னில்
பேர்கொண்ட மானிடசு ரூப மாகப்
பிறந்தடியார்க்கு உண்மைசொல்லிப் பிறவி நீக்கும்
சீர்கொண்ட ராசலிங்க ரற்றின மான
தேசிகனைப் புகழ்ஞானச் செயலை ஓத
கார்கொண்ட வாகுநடை கொண்ட ரற்றினக்
கணபதிதன் இருசரணம் காப்புத் தானே. 1

குறிப்பு : ராசலிங்க ரற்றின மான - ராசலிங்க ரத்தினமான ; வாகுநடை - அழகுநடை; கொண்ட ரற்றின - கொண்ட ரத்தின.

## நூல்

தேறாத சிற்றறிவால் மாய்கை நித்தம்
தேடியதி லேயழுந்தி உருவை நாட்டிப்
பேறாத கருணையதாய்த் தீட்சை ஓதிப்
பிறவிகடந் தேபதத்தைப் பெறுகச் செய்வாய்
கூறாத தியானமந்திரக் குருவை உன்னிக்
குறித்துநின்றைம் புலனைந்தும் கோணம் தாண்டி
மாறாத அருள்பெருகு இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 2

ஆசாபா சப்பவக் கடலில் மூழ்கி
அழுந்தாமல் ஆண்டருள அருட்கண் பார்த்துத்
தேசாருஞ் சரிகைகிரியை யோகத் தாலே
தெளிஞான அறிவான சிவமும் தோன்றப்
பேசாத மவுனமந்திரத் தியானம் ஓதிப்
பிறவிஎனும் சாகரத்தில் பிறவா தேசெய்
வாசம கோசரமாம் இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 3

குறிப்பு: பவக்கடல் - பிறவிக்கடல்; சரிகை - சரியை, சரியையைச் சரிகை என்றும் கூறுவர்; மவுன மந்திரம் - அஜபை; வாசமகோசரம்-வாக்கைக் கடந்தது.

தேசிகதற் பரவடிவாய் வந்தென் சிந்தை
திருக்ககற்றிக் கருக்குழிசே ராதே நீறு
பூசிஉப தேசித்துக் கிறீசம் தன்னைப்
போற்றிஅய்ந்து சுத்தியுடன் பூசை செய்து
நாசிவழி சுழிமுனைஓங் காரம் நாட்டி
நடுக்கடந்து பதிமேல்நா தாந்தம் காண
வாசியுண்மை ஓதுகுரு இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 4

குறிப்பு : திருக்ககற்றி - திருக்கு அகற்றி; திருக்கு - முறுக்கு, முடக்கம், மாறுபாடு (Mental kiuk); 'சிந்தைத் திருக்கு ஒட்டும்' சிவஞான சித்தியார் சுபக்கம், விநாயகர் வணக்கம். கிறீசம், கிறி - பொய், தந்திரம், மாயை, இறைவன் செயலை அன்பாலே கிறி என்பர், 'கேட்டாயோ தோழி கிறி செய்தவாறு ஒருவன்' திருவாசகம் 8,6.

மூலமதில் நாலுசுவத் திட்டா னத்தில்
மூவிரண்டு மணிபூர கத்திற் பத்துக்
கூலவனா கம்தன்னில் பன்னி ரண்டு
கூர்விசுத்தி தனிலீரெட்டாக் கிணையில் ரண்டு
மேலைவிறுமாந் திரத்தொன்றாம் அட்ச ரத்தில்
வீற்றிருக்கும் சற்குருமெய்ஞ் ஞான ரூப
வாலசவுந் தரகருணை இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 5

ஆனந்தமய மாகியநா தாந்த சோதி
அதுஇதுவென் றேகாண அருட்பா தத்தை
தானெந்தன் சென்னியின்மேல் வைத்து முத்தி
சார்ஞான அரிஉபதே சத்தை நல்கி
வேனென்ற மாய்கையெல்லாம் அகற்றி ஆள
வேண்டிமா னிடசுரூப மாக வந்து
மானந்தான் தவறாத இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 6

குறிப்பு: அது இது - அது என்பது 'தத்' என்று குறிக்கப் பெறும் இறை அருள்.

தந்தைதாய் ஆகியும்சற் குருவ தாயும்
சதாசிவமாம் தெய்வமது தானே யாயும்
எந்தனுயிர் உடல்பொருள் அத்துவ தாயும்
ஏகாந்த அறிவறிவது அறிய தாயும்
மந்திரபஞ் சாட்சரத்தை ஓது ஞான
வாருதியாய் மானிடசு ரூப மாக
வந்தபர வஸ்துஎன்னும் இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 7

தன்னறிவு நின்னறிவென்று அறியா வஞ்ச
சழக்கான புலன்வழியின் சார்பி னாலே
கன்னியர்கள் ஆசைவலைக் குள்ளே சிக்கிக்
கருத்தழிந்த நாயேனைக் கடைக்கண் பார்த்துச்
சொன்னமய மாகியநா தாந்த சோதிச்
சுடர்காட்டி அருள்பூட்டுஞ் சொருபா னந்த
மன்னுபர வஸ்துஎன்னும் இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 8

குறிப்பு: சொன்னமய - சொர்ணமய - தங்க மயமான.

தண்டிகைபூ தம்சுமக்கச் செய்தும், கும்பம்
தாபித்த தைஒருவர் சமத்தா யானை
கொண்டெடுக்க எடுபடாத் தியானம் செய்தும்;
கூன்நிமிர்ந்தும், முடநடந்தும், ஊமை வார்த்தை

விண்டிடச்செய் தும்,எட்டிதித் திக்கச் செய்தும்,
வீழ்ந்தபிரே தம்எழுந்து பேசச் செய்தும்
மண்டலமேல் புகழ்விளங்கும் இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 9

குறிப்பு: தண்டிகை - பல்லக்கு; யானை கொண்டு எடுக்க எடுபடாத் தியானம் - யானையாலும் அசைக்க முடியாத தியானநிலை; எட்டி - எட்டிக்காய்.

வங்கிசபா ரம்பரையாய்த் திருமா ணிக்க
மலையானை அர்ச்சனைசெய் மகிமை யாலே
இங்குலகில் அடியார்கள் வங்கிச மெல்லாம்
ஈடேறி வாழ்ந்தருள அருள்மெய் யான
துங்கசர வணையமா ணிக்க சுவாமி
சுதனாக வந்தெமையாண் டருளும் தேவே
மங்கைபங்க னானகுரு இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 10

குறிப்பு : வங்கிச பாரம்பரையாய் - பரம்பரை பரம்பரையாய்; வங்கிசம் - பரம்பரை, சுதன் - மகன்.

வேதமா கமமிருதி புராண சாஸ்திரம்
வேதாந்த சித்தாந்த மெய்நூல் ஓத
நீதிபல சாஸ்திரமும் தெரிந்த றிந்து
நீணிலத்தில் அடியாருக்கு உண்மை யான
போதனையாய்த் தீட்சைஉப தேசம் செய்யும்
பூசுரசி ரோமணியாய் வந்த சுவாமி
மாதொருபா கனைநிகராம் இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 11

குறிப்பு: மிருதி - ஸ்மிருதி; பூசுர சிரோமணி - அந்தணர் முடிமணி.

ஆசைநிதி தேடுசமு சார வாழ்க்கை
அதில்மயங்கித் தியங்கிஉடல் அலைந்தி டாமல்
வாசல்தொறும் அன்புகண்டு நின்று அன்னம்
வாங்கியுண்டு மீண்டுசிவத் தியானம் செய்து
பாசவினைப் பற்றறுக்கும் படிக டைக்கண்
பார்த்தெனையீ டேற்றும்ஆத் திரேய கோத்திர
மாசிலா மணியான இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 12

குறிப்பு: ஆத்திரேய கோத்திரம் - சுவாமிகளுடைய கோத்திரம்.

காசியிலும் வாசிஅவி னாசி வாசி
காகம்அணு காதமலை நாதர் வாசி
ராசிபொசி வாசிசிவ சிவாய வாசி
ராசலிங்க தேசிகன்சொல் வாசி என்று
பேசுநெஞ்சே எனமொழிந்த மொழிதப் பாமல்
பேரின்ப வழிகாட்டிப் பிறவி நீக்கி
வாசிமீ தானபதி இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 13

குறிப்பு: வாசி - வாசம் செய்பவர்; காகம் அணுகாத மலை - சிவாயம், ரத்தினகிரி; வாசி மீதான பதி - ஓதி அதனால் மிக்க உயர்ந்த நிலை அடைந்த தலைவர்.

ஆனைமுகற் கறுநூறு விதிக்கா றாயிரம்
அச்சுதற்கா றாயிரம்ருத் திரர்க்கா றாயிரம்
மோனமயே சுரற்காயிரம் சதாசி வர்க்கு
மூவாயிரம் தெட்சணா மூர்த்திக் காயிரம்
ஓநமசி வாயஅக அட்ச ரத்தில்
உதித்திடைபிங் கலைசுழிணை இயங்கும் சுவாசம்
மாறினவில் அரியஅருள் இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 14

குறிப்பு: இப்பாடல் நாம ஜப மகிமை கூறுகிறது.

சாலோகம் ஒருகோடி தியான மாகும்
சாமீபம் அதுவுமிரு கோடி யாகும்
மேலான சாரூபம் நாலு கோடி
வேண்டுசா யூட்சயமது எட்டுக் கோடி
ஆலாலம் உண்டவன்பேர் இடைவி டாமல்
அகத்திருத்தி மெய்ஞ்ஞான அறிவு தோன்ற
வாலாயம் ஓதுகுரு இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 15

குறிப்பு: இப்பாடல் நாம ஜபத்தின் பயனைக் கூறுகிறது ; வாலாயம் - பழக்கம்.

இரவுபகல் அறுபதுநா ழிகைசு வாசம்
இருபத்தோ றாயிரத்தி அறுநூ றாமாம்
பரமரக சியப்பொருள்அப் படியே யாகும்
பதினைந்து மாதமும்நாள் பன்னி ரண்டு
திரகடிகை அன்பத்தி யேழே முக்கால்ச்
சீரரைமா முந்திரிநாள் அட்சர லட்சம்
வருசாலோகம் அதனைச்சொல் இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 16

வருஷமிரண் டறுமாசம் னாளை அய்ந்து
மாகடிகையண் பத்தஞ்சரையொரு மாரைக் காணி
இருகோடி தியானஞ்சா மீப னாளாம்
இனியாணடைந் தொருமாசம் நால்மூ வேழு
தருகடிகை யெண்பத்தொன்று இருமாக் காணி
சாருபம் நால்கோடி தியான நாளா
வரிசையதாய் அரியஅருள் இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 17

குறிப்பு: இருமாக் காணி - இரு மாகாணி; மா 1/20, இருமா 1/10, அரைக்காணி 1/160, இரு மாகாணி 1/16 x 2 = 1/8.

பரசாயுட் சயம்வருஷம் தசமும் மாசம்
பதிமூன்று நாற்கடிகை யாறேழ் நால்மா
இருமுந்திரி இதில்ஆறில் ஒன்றோர் ரண்டாம்
எனமாசம் நான்பன்னேழ் கன்னல்பன்னேழ்
ஒருமுக்கா ணியும்கூட்டப் பன்னி ரண்டாம்
உண்மைதவம் இடைவிடாத் தியானம் செய்ய
வரம்அருளும் பரசொரூப இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 18

குறிப்பு: வருஷம் தசமும் - வருடம் பத்தும்; இரு முந்திரி 1/320 x 2 = 1/160.

ஆறிலொன்று கடமைகொண்ட சோழநீதி
அனஇருபத் தொன்றாயிரத்து அறுநூ றாகக்
கூறுசுவா சம்ஆறு கூறு செய்தோ
கூறுசில வதுவகற்றித் தொகைமே லேற்ற

தேறுதவம் பன்னீறாண் டஞ்செ ழுத்தைச்
சிந்தைதனில் இடைவிடாத் தியானம் செய்திவ்
வாறுபர கதிகொடுக்கும் இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 19

திருவருளால் செல்வம்இம்மை மறுமை வாணி
செயல்பலநூல் ஆராய அறிவு தோன்றும்
குருகடாட் சத்தினால் பரசா யூட்சயம்
கூடுமல்லால் வேறொன்றால் கூடா தாமாம்
ஒருபொருளாம் பிரணவ சிவாவென் றுண்மை
ஓதுசர வணையமா ணிக்க சுவாமி
வரசுதனே எனையாண்ட இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 20

குறிப்பு: பரசாயூட்சயம் - பர சாயுஜ்யம்; இராசலிங்க மாணிக்கவாசக சுவாமிகள் தந்தையார் சரவண மாணிக்கவாசக சுவாமிகள்.

காவிரியில் தானமது செய்து வேத
காயத்ரி செபம்புரிபோ திரண்டு வேங்கை
ஆவலுடன் முன்வந்து சரணஞ் செய்ய
அருகிருந்த பேர்பயந்து அவர்கள் ஓட
ஓவியநேர் தவமுடித்து விழித்துப் பார்த்தே
ஓசிவா வெனவேங்கை கழிபெற் றேக
மாவிரத காரணிக இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 21

கடியவஞ்ச வேரைஅறி வாலே வெட்டிக்
கணபதிமூ லக்கனலை எழுப்பிச் சுட்டுத்
திடமிகுபஞ் சாட்சரத்தால் சமன்செய் தன்பு
தெளியுமனம் புத்திவிரை ஊன்றி மேலாய்ப்
படர்வா னந்தநீர் தேக்கி ஞானப்
பழத்தையுண்டு கொண்டுகயி லாச வாசன்
வடிவுபெற அருள்புரியும் இராச லிங்க
மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 22

குறிப்பு: கடிய வஞ்சவேர் - ஆணவம்; அறிவாலே - சிவ ஞானத் தாலே ; படர்வானந்தநீர் - அமிர்த பிந்து.

மூலஓங் காரபீ டத்தெ ழுந்து

முற்றுபஞ்சாட் சரத்துருவாய் அருள தாகித்

தூலபர வஸ்த்துநா தாந்த உண்மை

தோன்றுமொரு பொருளாகிச் சிவாய வாகி

ஞாலமிசை நிட்கள சுரூப மாகி

நரவடிவாய் வந்தகுரு ராஜ கஞ்ச

மாலைருத்தி ராச்சமணி இராச லிங்க

மாணிக்கவா சகநமச்சி வாய வாழ்வே. 23

குறிப்பு: சுரூப - ஸ்வரூப - சுய உருவ; கஞ்ச - கஞ்சம் - தாமரை, கைத்தாளம்.

பரமரக சியம்தர ஆசையா நாவில்

பயிற்றிமனத் தாராயும் படிய தாயுன்

திருவடியைப் போற்றிநின்று தெண்ட னிட்டுச்

சிவசிவவென்று அருள்நீற்றை வாங்கிப் பின்போய்

சிரமுதல்தொட்டு அணிந்துசெபம் செய்து வந்து

தெரிசினைகண் டவர்பிறவி நீங்கி ஞானம்

.... ... ... ... ... ... ...

... ... ... ... ... ... 24



